# அம்புலிமாமா பொருள் அடக்கம்




அம்புலிமாமா ஆபீஸ்
போஸ்ட் பாக்ஸ் நெ.1686
சென்னை-1

**தம்பிகளே, தங்கைகளே!**

நீங்கள் எழுதும் கதைகள் இரண்டு பக்கங்களுக்கு மேல் இருக்கக்கூடாது. தெளிவாகத் தெரியும்படி வெள்ளைக்காகிதத்தில் எழுதி அனுப்பலாம். பென்சிலினால் எழுதக்கூடாது. சிலர் கதைகளுடன் போதுமான ஸ்டாம்பை வைக்காமலேயே என் கதை என்னவாயிற்று? எப்போது பிரசுரிக்கிறீர்கள்? என்றுகேட்கிறார்கள். நீங்கள் கதைகள் அனுப்பும்போது சரிவரப் பார்த்து அனுப்புங்கள். இது உங்களுக்குத் தெரிந்த விஷயம்தான். ஆனால் நீங்கள் இதை அடிக்கடி மறந்துவிடுகிறீர்கள்.

இனிமேலாவது உஷாராக இருப்பீர்கள் அல்லவா!

—ஆசிரியர்.



# மேன்மையான கைத்தறி ஆடைகள்

## குடும்பத்தின் சகல தேவைகளுக்கும்










புடவைகள் - வேஷ்டிகள் லுங்கிகள் - பாவாடை துணி கள் - சட்டை துணிகள்.

CP/210

எங்கள் கைத்தறி ஜவுளிகள் சென்னையிலும் இதர முக்கிய நக ரங்களிலுமுள்ள எம் விற்பனை எம்போரியங்களில் கிடைக்கும்

**மதராஸ் கைத்தறி நெசவாளர் மாகாண கூட்டுறவு சங்கம் லிமிடெட்**

"ஹாலோவேன் கார்டன்ஸ்"

34, பாந்தியன் ரோட், எழும்பூர், மதராஸ்.




திமுகம் 3 | ஆகஸ்டு 1948 | புன்னகை 2

# தேசியப் பண்டிகை

குழந்தைகளே! நமக்கு அனேக பண்டிகைகள் இருக்கின்றன. பொங்கல், தீபாவளி, தசரா, கிரிஸ்துமஸ், ரம்ஜான் என்று பல வகையான பண்டிகைகள் இருக்கின்றன. இவைகளை எல்லாம் ஒரே மதத்தினர்கள் கொண்டாட மாட்டார்கள். இந்துக்கள் பொங்கல், தீபாவளி ஆகிய பண்டிகைகளையும், கிருஸ்துவர்கள் கிரிஸ்துமஸ் முதலிய பண்டிகைகளையும், மகம்மதியர் ரம்ஜான் முதலிய பண்டிகைகளையும் கொண்டாடுவார்கள். ஆனால் எல்லா மதத்தினர்களும் ஒன்று சேர்ந்து கொண்டாடும் ஒரு பெரிய

பண்டிகை இருக்கிறது. அது என்ன என்று உங்களுக்குத் தெரியுமா! நம் இந்தியாவின் சுதந்திர தினப் பண்டிகையைத்தான் சொல்லுகிறேன்.

சென்ற வருஷம் ஆகஸ்டு 15-ம் தேதியன்று நம் இந்தியா சுதந்திரம் அடைந்தது. அன்று நாம் எல்லோரும் மட்டற்ற மகிழ்ச்சியுடன் சுதந்திரதினத் திருவிழாவைக் கொண்டாடினோம். மீண்டும் நாளை ஆகஸ்டு 15-ம் தேதியன்று அந்தத் திருவிழாவைச் சிறப்புடன் கொண்டாடப் போகிறோம்.

பாலர்களே! இந்தியாவின் விடுதலைக்காகத் தங்கள் உயிரையே தியாகம் செய்தவர்களில் லோகமான்ய பாலகங்காதர திலகர், மகாத்மா காந்தி ஆகியவர்கள் மிகவும் முக்கியமானவர்கள். நமது சுதந்திரப் பண்டிகையின் உற்சாக சமயத்திலே இவர்களின் புனித நாமதேயங்களை நாம் ஸ்மரிக்க வேண்டும். அவர்கள் செய்திருக்கும் தியாகத்தில் நாம் குறைந்தபக்ஷம் நூற்றில் ஒரு பங்கையாவது செய்து தீர வேண்டும். அப்போதுதான் நாம் உண்மையான பாரத மக்களாக விளங்க முடியும்.

இன்று நாம், நமது பாரதநாட்டின் சுதந்திர மக்களாக ஆகிவிட்டோம். நமது அரசாங்கத்தைப் பிரதமர் நேருஜீ அவர்கள் வெகு நேர்மையுடன் நடத்திக்கொண்டு வருகிறார். அவருக்குத் துணையாக சர்தார் வல்லபாய் பட்டேலும் இருக்கிறார். அவர்கள் நம் பாரத நாட்டின் தவப் புதல்வர்களாக, நீடூழி வாழ வேண்டுமென்று நாம் எல்லோரும் இறைவனைத் துதிப்போமாக!

ஜெய் ஹிந்த்.

# புத்திகெட்ட புலி

ஒரு குடியானவன் தன் நிலத்தை உழுதுகொண்டிருக்கும் சமயத்திலே, ஒரு புலி அவனிடம் வந்து "நீ க்ஷேமமாக இருக்கிறாயா?" என்று கேட்டது.

குடியானவன் புன் சிரிப்புடன் "ஆம், க்ஷேமம்தான்" என்றான்.

"ரொம்ப சந்தோஷம், கடவுள் என்னை இங்கே அனுப்பினார். உன்னிடம் இருக்கும் இரண்டு மாடுகளையும் எனக்குக் கொடுத்து விடும்படி உத்திரவிட்டிருக்கிறார். ஆகையால் உன் மாடுகளை இப்போதே கொடுத்துவிடு" என்று புலி கேட்டது.

இதைக் கேட்டு குடியானவன் திடுக்கிட்டான். சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தான். புலியைப் பார்த்து "புலி மச்சானே! நானோ ஏழை. என் நிலத்தை உழுது சீர்படுத்த எனக்கு இருப்பதோ இந்த இரண்டு மாடுகள்தான். நான் என்ன செய்வேன்? என் வீட்டில் மட்டும் ஒரே ஒரு பசு இருக்கிறது. வேண்டுமானால் அதைக் கொண்டுவந்து கொடுக்கிறேன்" என்று நயமாகக் கேட்டுக்கொண்டான்.

அவன் சொன்னதைப் புலியும் ஆமோதித்தது. "எனக்கு மாடும், பசுவும் எல்லாம் ஒன்றுதான். சீக்கிரம் சென்று பசுவைக் கொண்டு வா" என்று கத்திற்று.

புலியை நிலத்திலேயே இருக்கச் சொல்லிவிட்டு, குடியானவன் வீடு போய்ச் சேர்ந்தான். தன் மனைவியிடம் நடந்த சங்கதி எல்லாம்

எம். என். மணி, சென்னை.



மூச்சு விடாமல் சொன்னான். மனைவிக்கோ சொல்லி முடியாத கோபம் பொங்கிக்கொண்டு வந்தது. "நமக்கு இருப்பது இந்த ஒரே ஒரு பசுதான். இதைப் புலிக்குக் கொடுத்து விட்டால் நம் பிள்ளைகளுக்குப் பால் எப்படி கிடைக்கும்? எனக்குப் பாயசம் என்றால் உயிராச்சே? பால் இல்லாமல் பாயசம் எப்படி கிடைக்கும்? வேண்டுமானால் அந்த இரண்டு மாடுகளையே புலிக்குக் கொடுத்து விடுங்கள்" என்று பதில் கூறினாள்.

"நன்றாகத்தான் இருக்கிறது, உன் நியாயம்! மாடுகள் இல்லாவிட்டால் நிலத்தை உழ முடியாது. நிலத்தை உழாவிட்டால் பயிர் செய்ய இயலாது. பயிர் செய்யாவிட்டால் பட்டினி கிடந்துதான் சாகவேண்டும். போடி பைத்தியம்! பால் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. நான் பசுவைக் கொண்டுபோகிறேன்" என்று குடியானவன் பிடிவாதமாகப் பேசினான்.

அவன் மனைவிக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. அந்த சமயத்தில் அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. புருஷனை நோக்கி, "நீங்கள் புலியிடம் சென்று 'என் மனைவி பசுவைக் கொண்டுவருகிறாள். இன்று நீ ஏதோ நரி முகத்தில்தான் விழித்திருக்கிறாய்' என்று சொல்லுங்கள். அதன் பிறகு மற்ற விஷயங்களை நான் கவனித்துக் கொள்கி

றேன்" என்று அவனிடம் சொல்லி அனுப்பினான்.

குடியானவன் தன் மனைவி சொன்னதை அப்படியே புலியிடம் சொன்னான். அதைக் கேட்டு புலி சந்தோஷப்பட்டது.

குடியானவனின் மனைவி ஒரு ராணிவேஷம் போட்டுக்கொண்டு குதிரைமீதேறிப் புலி இருக்கும் இடத்திற்குச் சென்றாள். அவள் குதிரையின் கடிவாளத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அதிகக் கோபத்துடன் புலியை நோக்கி, "ஓகோ, நீ இங்கேதான் இருக்கிறாயா? என் திட்டத்தின்படி இன்னும் ஒரு புலி மட்டும் பாக்கியாக இருக்கிறது. நானும் உன்னைப் பிடித்துப் போகத்தான் காடெல்லாம் அலைந்து பார்த்தேன். முடிவில் இங்கே சந்திக்க நேர்ந்தது. சரி, வா! என்னுடன் உன்னை அந்த காளிக்குப் பலியிடப் போகிறேன்" என்று உரத்த குரலில் மிடுக்காகப் பேசினாள்.



அவள் இதைச் சொல்லி முடிப்பதற்குள், புலி ஒரே ஓட்டமாகக் காட்டுவழியைப் பார்த்து ஓடிவிட்டது. குடியானவன் தன் மனைவி செய்த சூழ்ச்சிக்கு மெச்சி மனமகிழ்ந்தான். பிறகு அவன் தன் இரண்டு மாடுகளையும் ஓட்டிக் கொண்டு வீட்டைப் பார்த்து, நடந்தான். அவன் மனைவியும் ராணி வேஷத்தை அகற்றி விட்டுப் பழைய உடைகளை அணிந்து கொண்டு அவனுடன் சந்தோஷமாக வீட்டிற்குச் சென்றாள். அன்று முதல் புலி மட்டும் அந்தப் பக்கமே தலை காட்டுவதில்லை.

# பழிக்குப் பழி

சுந்தரேசன் — சென்னை



சாஸ்திரி ஒருநாள் சந்தோஷத்துடன்
சாலையின் ஓரம் போகையிலே
மேஸ்திரிபோலே மீசை முறுக்கிட
மந்திரி ஐயா வந்தனரே!

மந்திரிவரவைப் பார்த்ததும் சாஸ்திரி
மரியாதையுடன் வணங்கினதும்
மெலிந்த குடுமியை மந்திரி பிடித்து
மெதுவாய்த்திரித்து விட்டனரே!

"ஐயா, சாஸ்திரி! என்ன கையிலே
அட்டைப் பெட்டிபோ லிருக்கிறதே
கொய்யாப் பழத்தைப் போட்டுக் [கொள்ளவா?
கூறிடும் சுவாமி!" என்றனரே!

"பெட்டி அல்லவே மந்திரி ஐயா!
பாரதம் கையில் இருப்பதுவே
பட்டிக்காட்டில் படித்துச் சொல்லவே
பயணம் ஆகினேன்" என்றனரே!

சாஸ்திரி சொன்னதைக் கேட்டு மந்திரி
சிரிப்பாய்ச் சிரித்து விட்டனரே!
வாஸ்தவமாகப் பழிக்குப் பழியை
வாங்கிட சாஸ்திரி எண்ணினரே!

ஒருநாள் மந்திரி வாளை ஏந்தியே
ஒய்யாரத்துடன் வருகையிலே
சிரித்தவாறே சாஸ்திரி வணங்கிடச்
சலாமும் போட்டார் மந்திரியார்!

"மங்கிக்கிடக்கும் மண்டு! எனக்கோர்
மரியாதை நீர் செய்யாதுமே;
உங்கள்கத்தியால் க்ஷவரம்செய்யவே
உதவிபுரிந்திட வேண்டுகிறேன்"

என்று கேட்டதும் மந்திரி ஏறே
ஏக்கத்துடனே நின்றனரே!
முன்னும் பின்னுமே யோசியாமலே
மோசம் போனதை நினைந்தனரே!

வெட்கம்கொண்டனர் மந்திரி துயா
வேறே சொல்லவும் தெரியாமல்
விளையாட்டே வினையாகும் என்பதை
விளக்கிக்காட்டினார் சாஸ்திரியார்!







1



2



3



4



5



6



7



8

## தம்பிகளே, தங்கைகளே!

மேலே எட்டு சுதந்திரக் கொடிகள் இருக்கின்றனவல்லவா? அவைகளில் ஆறு கொடிகள் ஒரேமாதிரியாகவும், இரண்டு கொடிகள் மற்றொரு மாதிரியாகவும் இருக்கின்றன. அந்த இரண்டு கொடிகளைமட்டும் கண்டுபிடிக்கமுடியுமா? முடியா விட்டால் கடைசிப் பக்கங்களில் பாருங்கள்.

# சீர்திருத்தம்

தர்மபுரி என்னும் நாட்டிலே தர்ம சீலர் என்று ஒரு செல்வர் இருந்தார். அவர் பெயருக்கு ஏற்றபடி ஏழைகளுக்கு தான தருமங்களைச் செய்து வந்தார். ஊர் ஜனங்களுக்கு தர்மசீலரிடத்தில் மிகுந்த மரியாதை ஏற்பட்டது.

தர்மசீலருக்கு ஒரு மகன் இருந்தான். அவன் பெயர் தயாளன். தர்மசீலர் தயாளனை நல்ல பழக்க வழக்கங்களுடன் வளர்க்க வெகு ஆவல் கொண்டிருந்தார். தயாளன் பள்ளியில் நன்றாகக் கற்றுத் தேர்ந்தான். ஆனால் என்ன பிரயோஜனம்! பள்ளி மாணவர்களுடன் கூடி அடிக்கடி ஊரைச் சுற்றி, கெட்ட பழக்க வழக்கங்களில் ஈடுபட்டான். தர்மசீலரோ தன் ஒரே மகனைக் கண்டித்துப் பேச முடியாமல், அவனுக்கு வேண்டிய பணத்தை நாள் தோறும் கொடுத்து வந்தார்.

தயாளனிடம் பணம் இருக்கிறதென்ற சங்கதியை அறிந்த நண்பர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். தண்ணீர் இருக்கும் இடத்தைத் தேடித்தானே தவளைகளும் செல்லும். அதைப்போல் பள்ளி மாணவர்கள் தயாளனுடன் சேர்ந்து, அவனை நாள் தோறும் நினைத்த இடங்களுக்கு எல்லாம் அழைத்துச் சென்று, கெட்ட நடவடிக்கைகளில் ஈடுபடுத்தி விட்டனர். தயாளனின் தேக நிலை நாளுக்கு நாள் க்ஷீணித்துப்போக நேர்ந்தது. இதை அறிந்த தர்மசீலர் தயாளனுக்கு அன்று முதல் ஒரு செப்புக் காசும் கொடுக்க மறுத்து விட்டார். தயாளனிடத்தில் பணம்

ஆர். என். ராஜலக்ஷ்மி, மயிலாப்பூர்



இல்லை என்ற சங்கதியை அறிந்து அவன் நண்பர்கள் யாரும் அவனைத் தேடி வருவதை விட்டு விட்டார்கள்.

தயாளன் இப்பொழுது தனித்து நின்று விட்டான். அவன் தலை 'ஙிர்' என்று சுழன்றது. இந்த உலகமே அவன் கண்களுக்கு இருண்டு விட்டதுபோல் இருந்தது. தயாளனுக்கு ஒரு நிமிஷமும் வீட்டில் இருக்க மனம் வரவில்லை. அன்றிரவில் யாருக்கும் தெரியாமல் வீட்டை விட்டு வெளியே போய் விட்டான். அவன் எங்கே போனான் என்பது யாருக்கும் தெரியாது.

மறுநாள் காலையில் தர்மசீலர் தன் மகனைத் தேடிப் பார்த்தார். அவனை எங்கேயும் காணவில்லை. தர்மசீலருக்கு ஒன்றும் விளங்கவில்லை. தன் மகனைப் பற்றி ஒரே கவலையாக இருந்தார். அவனை எப்படியாவது கண்டு பிடித்துக் கொண்டு வரவேணுமென்று நினைத்துத் தன் வேலையாட்களை நோக்கி, "நீங்கள் இப்போதே விரைந்து சென்று தயாளனைக் கண்டு பிடியுங்கள். அவனைப் பார்த்தபிறகு உடனே அழைக்க வேண்டாம். அவனுக்குத் தெரியாமல் நீங்கள் முன்னதாகச் சென்று, அவனுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்து உதவி செய்யுங்கள். எப்படியாவது அவன் தானாகவே வீட்டைத்தேடி வந்து விடுவான். ஆகையால் அதற்கு வேண்டிய பணத்தை எடுத்துச் செல்லுங்கள்" என்று சொன்னார். வேலையாட்களும் அதன்படியே தயாளனைத் தேடிச் சென்றார்கள்.

தயாளன் வெகுதூரம் நடந்த பின் மேலும் நடக்க முடியாமல் சோர்வுற்று, ஓர் மரத்தடியில் உட்

பார்த்தான். அவனுக்கு எதிரில் ஒரு மிட்டாய்க்கடை இருந்தது. அந்தக்கடை தர்மசீலரின் வேலையாட்களுடையது என்று தயானனுக்கு எப்படித் தெரியும்? தயானன் கையில் ஒரு செப்புக் காசும் கிடையாது. பசியோ காதை அடைத்தது. தயானன் செய்வதின்றிக் கடைக்காரர்களிடம் சென்று, "ஐயா, எனக்குப் பசியாக இருக்கிறது. ஏதாவது இருந்தால் கொடுங்கள்" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். உடனே அவர்கள், தயானனுக்கு வேண்டிய தின்பண்டங்களைக் கொடுத்து உதவினார்கள். பிறகு தயானன் அன்றிரவு அங்கேயே தூங்கிவிட்டான்.



பொழுது விடிந்ததும் தயானன் அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு, தன் வழியே நடந்து சென்றான். வழியில் ஒரு ஏரி குறுக்கிட்டது. ஏரியின் ஆழம் அதிகமாக இருந்ததால், அக்கரைக்குச் செல்லுவோர் படகில் ஏறிக்கொண்டு போனார்கள். படகு ஓட்டுபவன் அவர்களிடம் காசை வாங்கிக்கொண்டுதான் கரை சேர்ப்பித்தான். ஆனால் தயானனிடம் காசில்லை. அவன் முழித்துக் கொண்டிருப்பதைப் பார்த்த படகுக்காரர்கள், அவனைப் படகில் ஏற்றிக்கொண்டு கரை சேர்த்து விட்டார்கள். தயானன் அவர்களுக்குத் தன் நன்றியை செலுத்தி விட்டு, மீண்டும் நடக்கத் தொடங்கினான். படகுக்காரர்களும் தர்மசீலரின் வேலையாட்கள் தான் என்று அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை.

சிறிது தூரம் சென்றதும் ஒரு பெரிய மலை குறுக்கிட்டது. மலை ஏற அவனால் முடியாமல் திகைத்துக் கொண்டிருந்தான்

போது அவனுக்கு அதிக தாகம் ஏற்பட்டது. தண்ணீர் இருக்கும் இடமே அவனுக்குத் தெரியவில்லை. அதே சமயத்தில் தர்மசீலரின் வேலையாட்கள் அவன் எதிரில் ஒரு அழகான பல்லக்குடன் தோன்றினார்கள். தயாளனை அந்தப் பல்லக்கில் ஏறி உட்காருப்படி கேட்டுக் கொண்டார்கள். தயாளனுக்கு விஷயம் ஒன்றும் விளங்கவில்லை. பேசாமல் பல்லக்கில் உட்கார்ந்தான். வேலையாட்கள் அவனைப் பல்லக்கில், சுமந்து நடந்தார்கள். தயாளனுக்கு அவர்கள் மீது சந்தேகம் ஏற்பட்டது. "நீங்கள் யார்? எனக்கு இவ்வளவு உதவி செய்கிறீர்களே! நான் உங்களுக்கு ஒரு உபகாரமும் செய்யவில்லையே?" என்று கேட்டான்.

வேலையாட்கள் தயாளனிடம் நடந்த சங்கதியைச் சொன்னார்கள். உடனே தயாளன் மனம் மாறி விட்டது. "ஆகா! என் அருமைத் தந்தைக்கு என் மீது எவ்வளவு அன்பு! நான் கொடியவன் என்று அவருக்குத் தெரிந்திருந்தும் என்னை எவ்வளவு ஜாக்கிரதையாகப் பாதுகாத்தார். என் தந்தையைப் போன்ற தர்மசீலர்கள் உலகிலும் இருப்பார்களா?" என்று அலறினான். தன் வேலையாட்களுடன் தயாளன் வீட்டுக்குச் சென்று தந்தையின் காலடியில் விழுந்து, "தந்தையே! என்னை மன்னியுங்கள், மன்னியுங்கள்!" என்று கதறி அழுதான்.

தர்மசீலரின் முகம் மலர்ந்தது. தயாளனை அன்புடன் கட்டித் தழுவிக்கொண்டார். "இப்போதாவது தன் மகன் நல்ல வழிக்கு வந்தானே; அதுவே போதும்" என்று நினைத்துத் தான் செய்த சீர்திருத்தம் வெற்றி பெற்றதற்கும் சந்தோஷமடைந்தார்.






முன்ஒரு காலத்திலே ஒரு அரசன் இருந்தான். அநேக வருடங்களாகியும் அவனுக்கு ஒரு குழந்தைகூட பிறக்கவில்லை. அநேக விரதங்களும், பூஜைகளும் செய்து பார்த்தான். ஒன்றும் பலிக்கவில்லை.

ஒரு நாள் ராணி தன் அரண்மனை நந்தவனத்திலிருக்கும் குளத்தில் நீராடிக்கொண்டிருந்தாள். அந்த சமயத்தில் குளத்திலிருந்து ஒரு அழகான தவளை பொன் மேனியுடன் 'மினுக், மினுக்' என்று ஜொலித்தவாறு ராணியின் எதிரில் தோன்றியது. ராணி அதைப் பார்த்து மிகுந்த மகிழ்ச்சியுடன் "ஆகா! எவ்வளவு அழகான தவளை; எனக்கே ஒரு பெண் குழந்தை பிறந்தால் இந்தத் தவளைக்குக் கொடுத்து விவாகம் செய்துவைக்கமாட்டேனா" என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

"அப்படியே நடக்கும்" என்ற பாவனையில் தவளையும் தன் தலையை அசைத்து 'லொடக்' என்று தண்ணீரில் மூழ்கிச் சென்றது.

இந்த சம்பவம் நடந்த ஒரு மாதத்திற்குப் பிறகு ராணி கர்ப்பவதியானள். இந்தச் சங்கதியை கேட்ட அரசன் அளவுகடந்த சந்தோஷ மடைந்தான். பத்து மாதங்கள் முடிந்ததும் ராணிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. குழந்தையோ செக்கச் செவேர் என்று அழகாக இருந்தது. குழந்தை பிறந்த பத்தாம் நாளன்று அரசன் புரோஹிதர்களை வரவழைத்து குழந்தைக்கு நாமகரணம் செய்வித்தான். புரோஹிதர்கள் குழந்தைக்கு 'ரோஹிணி' என்று பெயரிட்டார்கள்.

ரோஹிணி நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக

பி. எம். பழனிவேலு, பொள்ளாச்சி



வளர்ந்து பதினாறு வயது யுவதியானாள். இந்த சந்தோஷத்தில் ஆழ்ந்த ராணிக்கு அன்று குளத்தில் நீராடிக்கொண்டிருந்தபோது நடந்த சங்கதி ஞாபகத்திற்கு வரவில்லை. ரோஹிணிக்கு விவாகம் செய்யத் தீர்மானித்தார்கள்.

இந்த சங்கதியைக் கேட்ட பொன் தவளை கோபத்துடன் குளத்தை எல்லாம் கோலாகலம் செய்யத் தொடங்கிற்று. ஒருநாள் ரோஹிணி குளத்தில் நீராடிக் கொண்டிருக்கும் போது திடீரென்று தவளை அவன் தோளின் மீது குதித்து நின்றது. ரோஹிணி பயத்துடன் குளத்தை விட்டு வெளியே வந்து ஓட முயன்றாள். ஆனால் தவளை மீண்டும் அவள் தோளின் மீது குதித்தது. எத்தனை தடவைகள் கீழே தள்ளிவிட்டாலும் தவளை ரோஹிணியை விடவில்லை. ரோஹிணி செய்வதின்றி தவளையைத் தன் மடியில் போட்டுக்கொண்டு அரண்மனைக்குத் திரும்பினாள்.

தோழிகள் ரோஹிணியைப் பார்த்து "அது என்னம்மா! மடியிலே ஏதோ ஒளித்துக் கொண்டு போகிறாயே?" என்று கேட்டார்கள்.

ரோஹிணி முழித்துக்கொண்டே "ஒன்றுமில்லை, வெற்றிலை கொண்டு போகிறேன்" என்று சொன்னாள்.

இதைக் கேட்ட மடியிலிருந்துத் தவளை கோபத்துடன் 'தொப்' என்று வெளியே குதித்து ரோஹிணியை நோக்கி—

தவளை என்றுதான் சொல்லேன்டி!
தாலி கட்டியவன் நான்தான்டி.
வெற்றிலைக் கட்டென ஏன் சொன்னாய்
வெட்கமில்லாமலே சொல்லாதே
நான் உன் காதலன் நீ என்னை
மறுக்க விடாதே கண்ணுட்டி!

என்று பாடிற்று.





இந்தப் பாட்டைப் பாடிக் கொண்டே தவளை ரோகிணியின் மடிக்குள் தாவிச் சென்றது. அங்கே கூடியிருந்த பெண்கள் எல்லாம் அதிசயத்துடன் அப்படியே பிரமித்து விட்டார்கள். ரோகிணி இந்த சங்கதியைத் தன் தாயாரிடம் சொன்னாள். அப்போதுதான் ராணிக்குத் தவளையின் ஞாபகம் வந்தது. நடந்ததைஎல்லாம் ரோகிணிக்குச் சொன்னாள். ரோகிணி தாயார் சொற்படி நடக்கத் தீர்மானித்தாள்.

அரசனும், அரசியும் ரோகிணியின் சம்மதப்படி அவளைத் தவளைக்குக் கொடுத்து விவாகம் செய்து வைத்தார்கள். கலியாணம் முடிந்ததும் ரோகிணி தன் பெற்றோர்களிடம் விடை பெற்றுக்கொண்டு தவளைப் புருஷனைத் தோளின் மேல் ஏற்றிக்கொண்டு தவம் செய்யக் காட்டுக்குச் சென்றாள். ரோகிணியின் தவத்திற்கு மெச்சி பரமசிவன் பார்வதியுடன் நேரில் தோன்றி "உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார்.

"என் புருஷனுக்கு மனித உருவம் அளிக்கவேண்டும்" என்று சொன்னாள்.

"அப்படியே ஆகக்கடவது!" என்று சொல்லி அவர்கள் மறைந்து விட்டனர். உடனே தவளை ஒரு அழகான ராஜகுமாரனைப் போல் உருவம் பெற்று ரோகிணிமுன் நின்றான். ரோகிணி சந்தோஷத்துடன் தன் புருஷனோடு அரண்மனைக்குத் திரும்பினாள். பெற்றோர்கள் மகிழ்ச்சியுடன் ரோகிணிக்கும் தவளை அரசகுமாரனுக்கும் வெகு விமரிசையாக மறுமணம் செய்தார்கள். அன்று முதல் இணைபிரியாமல் ரோகிணி தன் புருஷனுடன் சுகமாக வாழ்ந்து வந்தாள்.

# வர்தமானனின் விதேச யாத்திரை

(சென்ற இதழின் தொடர்ச்சி)

யாமனர்கள் வர்தமானனுக்கு மலைமனிதன் என்று பெயரிட்டார்கள். அவனைப் பார்க்கவேணுமென்ற ஆவலுடன் அந்த ஊர் ஜனங்கள் கோவிலுக்கு வெளியில் கும்பலாகக் கூடியிருந்தார்கள். அரசனும், ராணியும், மந்திரிமார்களும் வர்தமானனைப் பார்க்க விரும்பி, கோவிலுக்கு எதிரில் கட்டப்பட்டிருந்த ஒரு வட்ட மேடைமீது ஏறி நின்றார்கள். கோவில் வாசற்படியில் படுத்திருந்த வர்தமானன் தன் உருவத்தை ஜனங்களுக்குக் காட்ட எண்ணி மேலே எழுந்து நின்றான். சுற்றுமுற்றும் பார்த்தான். அவன் கண்களுக்கு அங்கே கூடியிருந்த மக்கள் ஜப்பான் பொம்மைகளைப்போல் காட்சி யளித்தனர். ஊரில் உள்ள பெரிய பெரிய வீடுகளும் அவன் கண்களுக்குச் சின்னச் சின்ன பொம்மை வீடுகளைப்போல் தெரிய வந்தது.

அரசன் வர்தமானனுடன் நேரில் பேச எண்ணி ஒரு குதிரை மீது ஏறி அவனிருக்கும் இடத்தை அணுகினான். ஆனால் மலை போன்ற மனிதனைக் கண்டிராத குதிரைக்கு வர்தமானனைப் பார்த்ததும், முன்னும் பின்னும் ஓட ஆரம்பித்தது. நல்லகாலமாக அரசன் கீழே விழாமல் தப்பித்துக் கொண்டான். அரசன் தன் குதிரையை விட்டுக் கீழே இறங்கி, வர்தமானனுக்குச் சமீபத்தில் வந்து நின்றான். அரசனின் சௌகரியத்தை முன்னிட்டு வர்தமானன் கீழே சாய்ந்துப் படுத்துக் கொண்டான்.

[ஜோனதன் ஸ்விப்ட் எழுதிய 'கல்லிவர்ஸ் ட்ராவல்ஸ்'ஸைத் தழுவியது.]



அரசன் வர்தமானனின் காதில் விழும்படியாக உரத்த குரலில் ஏதேதோ பேசினான். வர்தமானனுக்கு அது ஒன்றும் புரியவில்லை.

அரசன் சிறிது நேரம் யோசித்தான். "இவனுக்கு நம் பாஷை தெரியாவிட்டாலும் பரவாயில்லை. ஆளைப் பார்த்தால் மிகவும் சாதுவாக இருக்கிறான். இவனால் நமக்கு ஏதாவது உதவி தேவையாக இருக்கக் கூடும். இவனுக்கு இஷ்டமான பக்ஷணங்களைக் கொடுத்து உதவலாம்" என்று நிர்மானித்துக் கொண்டு தன் சேவகர்களிடம் வர்தமானனுக்கு வேண்டிய உதவிகளை செய்து கொடுக்கும்படி உத்திரவிட்டான். அன்று முதல் வர்தமானனுக்கு நல்ல வேட்டை தான். சேவகர்கள் நாள்தோறும் தவறாமல் அவனுக்குத் தினுசு தினுசான உணவுகளைக் கொடுத்து வந்தார்கள்.

வர்தமானனை வேடிக்கையாகப் பார்க்க வந்த மக்கள் அந்த இடத்தை விட்டுப்போக மனம் வராமல் அவனை அப்படியே ஒரே பார்வையாக பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரு சிலர் வர்தமானன் மீது கற்களை வீசி எறிந்தனர். அம்புகளையும் எய்தனர். வர்தமானன் அவர்களைப் பிடித்துத் தன் சட்டைப்பைக்குள் போட்டுக்கொண்டான். பாவம், சட்டைப் பைக்குள் இருந்த வாமனர்கள் "குய்யோ, முறையோ" என்று கூச்சலிட்டுக் கதறினார்கள். வர்தமானன் சிறிது நேரம் அவர்களை அழவைத்துப் பிறகு வெளியே எடுத்துப் போட்டான். பூனைக் குட்டிகளைப்போல வாமனர்கள் கூச்சலிட்டுக் கொண்டே சென்றார்கள். இந்தச் செய்தியைக் கேட்ட அரசன் மட்டில்லா மகிழ்ச்சியுடன்

வர்தமானனைப் புகழ்ந்து பாராட்டினான்.

வர்தமானன்மீது அரசனுக்கு அன்பு பெருகியது. அவனுக்கு ஒரு அழகான படுக்கையை தயார் செய்து கொடுக்கும்படி தன் அரண்மனைத் தையல்காரர்களுக்கு உத்திரவிட்டான். அது தையல் காரர்கள் ஒன்று சேர்ந்து அவனுக்கு வேண்டிய அளவில் ஒரு படுக்கையைத் தயார் செய்து கொடுத்தார்கள். அதை செய்துமுடிப்பதற்குள் அவர்கள் பட்ட பாடு கொஞ்சம் நஞ்சமல்ல! கோடைகாலத்துக் கேற்ற ஒரு போர்வையையும் அநேக சிப் பந்திகளைக் கொண்டு அவனுக்குத் தயார் செய்து கொடுத்தார்கள்.

அந்த தேசங்களிலிருந்து அநேகர் வந்து வர்தமானனைப் பார்க்க விரும்பினார்கள். ஆனால் பகை அரசர்கள் நம் வர்தமானனை ஏதாவது செய்துவிடப் போகிறார்களோ என்றுமோ என்று நினைத்து அரசன் அன்றுமுதல் வர்தமானனைப் பார்க்க வரும் வெளிநாட்டினரைத் தன் உத்திரவு இல்லாமல் அனுமதிக்கக்





கூடாது என்றும் ஒரு சட்டத்தை ஏற்படுத்தினான். இதனால் அதிகக் கூட்டத்தைத் தவிர்க்க முடிந்தது.

நாளடைவில் வாமனர்களுக்கு மலைமனிதன் என்ற பயம் நீங்கி விட்டது. எல்லோரும் பயமின்றி அவனிடம் சென்று விளையாடத் தொடங்கினார்கள். வெகு சிலர் அவன் உள்ளங்கையில் நின்று நாட்டியம் ஆடினார்கள். இப்படியாக வர்த்தமானன் அவர்களுடன் காலத்தை கழித்து வந்தான்.

வர்த்தமானன் வாமன பாஷையை நன்றாகக் கற்றுத் தேர்ந்தனும். அரசன் அடிக்கடி அவனிடம் வந்து ஏதாவது பேசி விட்டுப் போவான். ஒரு நாள் வர்த்தமானன் தன்னைக் கட்டிப் போட்டிருந்த கால் சங்கிலியை அவிழ்த்துவிடும்படி அரசனைக் கேட்டுக்கொண்டான். ஆனால் அரசன் அவனிடம் ஒன்றும் பேசாமல் போய்விட்டான்.

மறுநாள் அரசன் வர்த்தமானனிடம் ஏதோ பேசிவிட்டுப் போக

வந்தான். அப்போதும் வர்தமா னன் அரசனை நோக்கி "நீங்கள் என்னை விடுதலே செய்யவே மாட் டீர்களா?" என்று கேட்டான்.

"நான் செய்வது ஒன்றும் இல்லை. என் மந்திரிகளும், உற வினர்களும் என்னைத் தடுக்கிறார் கள். நீ மட்டும் உன்னை சோதனை செய்வதற்கு அனுமதித்தால், நான் அவர்களைக் கேட்டுக் கொண்டு உன்னை விடுவிக்கும்படி ஏற்பாடு செய்கிறேன்" என்று அரசன் கூறினன்.

"அதற்கென்ன! அப்படியே செய்யுங்கள்!" என்று வர்தமா னன் பதில் கூறினன்.

அரசனின் உத்திரவின்படி சேவகர்கள் வர்தமானனை சோதனையிடத் தொடங்கினர்கள். வர்தமானன் சில சேவகர்களைத் தன் சட்டைப் பைக்குள் விட்டுச் சோதனை செய்யச் சொன்னன். சோதனை முடிந்தபிறகு சேவகர் கள் அரசனிடம் விரைந்து சென்று "அரசே! நாங்கள் அவன் சட்டைப் பைக்குள்



நுழைந்துப் பார்த்தோம்; அதில் பெரிய பெரிய பொன் தட்டுகள் இருந்தன. அவற்றின் மேல் பொன் எழுத்துக்களும் காணப் பட்டன. (அது வர்தமானனின் பொன் நாணயங்கள்) அதன் பிறகு அடுத்தபைக்குள் நுழைந்து பார்த்தோம். அதில் ஒரு பெரிய பெட்டி ஒன்று இருந்தது. அதைத் திறந்து உள்ளே சென்றோம். அவ்வளவுதான். எங்களால் அந் தப் பெட்டியுள் காலே வைக்க முடியவில்லை. அதில் ஏதோ சிகப்பு மண் இருந்தது. அதன்

கொடி தாங்காமல் "அசக், அசக்" என்று தும்பினோம். அதை அடக்க முடியாமல் வெளியே வந்து விட்டோம். (இது வர்தமானனின் மூக்குத்தூள் டப்பி) அவன் இடுப்பில் ஒரு அன் இருந்தது. அது உலோகத்தினால் செய்யப்பட்டதுதான். அவன் அதை முனே இடுப்பில் கட்டிக் கொண்டிருந்தான்" (இது வர்தமானனின் வாள் உறை) என்று மூச்சுவிடாமல் சொன்னார்கள்.

அரசன் அவர்கள் சொன்னதை எல்லாம் ஒரு புத்தகத்தில் குறித்துக் கொண்டு நேராக வர்தமானனிடம் சென்று அந்த சாமான்களைத் தன்னிடம் கொடுத்து விடும்படிக் கேட்டான். வர்தமானன் பதில் பேசாமல் எல்லாவற்றையும் அரசனிடம் ஒப்புவித்தான்.

மறுநாள் வர்தமானன் தன்னை விடுதலை செய்யும்படி அரசனைக் கேட்டுக் கொண்டான். அரசன் சில நிபந்தனைகளின் பேரில் வர்தமானனை விடுவித்தான். அந்த நிபந்தனைகள் என்னவென்று தெரியுமா? "வர்தமானன் அரசன் உத்திரவில்லாமல் வெளியே போகக்கூடாது. நகரைச் சுற்றி வரவேண்டுமானால் இரண்டு மணிக்கு முன்னதாகவே தெரிவிக்கவேண்டும். பயிரிடும் நிலத்திலும், புல் வெளிகளிலும் அவன் படுக்கக் கூடாது. யார் தலை மீதும், வீட்டின் மீதும் காலை வைக்கக் கூடாது. யுத்தம் நடக்கும் சமயத்திலே வர்தமானன் வாமனர்களுக்கு உதவியாக இருந்து போர் செய்யவேண்டும்." இது மாதிரி நிபந்தனைகளுக்கு உடன்பட்டப் பிறகுதான் வர்தமானனை அரசன் விடுதலை செய்தான்.

(தொடரும்)





# நல்ல தீர்ப்பு

முன் ஒரு காலத்திலே கருப்பன் என்று ஒரு வேளாளன் இருந்தான். அவன் எல்லாருடனும் வீண் சண்டை இட்டு அவரெல்லாம் கடுக்கவைப்பான். அதனால் அவனிடம் யாரும் சென்று எதைப் பற்றியும் பேச மாட்டார்கள்.

கருப்பன் வீட்டுக் கொல்லையிலே ஒரு பெரிய கிணறு இருந்தது. அதை அவன் பக்கத்து வீட்டு சோமதீக்ஷிதருக்கு விற்று விட்டான். அன்று முதல் கிணறு தீக்ஷிதருக்குச் சொந்தமாகி விட்டது. ஆனால் அவர் கிணற்று ஜலத்தை உபயோகிக்காமல் அப்படியே விட்டுவிடுவார்.

ஒருநாள் சோமதீக்ஷிதர் மகளுக்குக் கல்யாணம் நடந்தது. பந்துக்களும் வந்திருந்தனர். சாப்பாடு முடிந்தபிறகு தீக்ஷிதர் அவர்களை பக்கத்துவீட்டுக் கருப்பன் கொல்லையிலிருக்கும் கிணற்றின் ஜலத்தை எடுத்துக் கைகால்களைக் கழுவிக் கொள்ளும்படி சொன்னார். அதன்படி அவர்கள் கிணற்றின் அருகில் சென்றார்கள். கருப்பன் அதைப்பார்த்து அவர்களைக் கிணற்றுப் பக்கம் காட விடாமல் விரட்டினான். இதை அறிந்த தீக்ஷிதர் கருப்பனிடம் சென்று, "கருப்பா, நீ தான் எனக்குக் கிணற்றை விற்றுவிட்டாயே. தண்ணீர் எடுக்க ஏன் இப்போது தடைசெய்கிறாய்?" என்று கேட்டார். கருப்பன் பல்லைக்காட்டியவாறு, "ஏது, தீக்ஷிதருக்கு ஆசை அதிகமாகிவிட்டது போலிருக்கிறதே! நான் உமக்குக் கிணற்றை மட்டும் விற்றேனேயொழிய, அதன் ஜலத்தை விற்கவில்லை. ஆகையால் அதிலிருக்கும் தண்ணீர் எனக்குத்தான் சொந்தம்" என்று வாதாடினான்.

தீக்ஷிதரும் அவனிடம் ஒன்றும் பதில்பேசாது தன் வேலைகளை முடித்தபிறகு, கருப்பன் மீது

பி. டி. அருணாசலம் - கும்பகோணம்



கோர்ட்டில் தாவா செய்தார். மறு நாள் காலை 10 மணிக்கு நீதிபதி வந்து தன் ஆசனத்தில் அமர்ந்தார். முதலில் நிஷிதரின் மனுவை எடுத்து அதை நன்றாகப் பார்வையிட்டார். பிறகு அவர் கருப்பனைப் பார்த்து, "அடே கருப்பா! நீ நிஷிதருக்கு உன் கிணற்றை விற்று எத்தனை மாதங்கள் ஆயிற்று?" என்று கேட்டார்.

கருப்பன் 'சட்' என்று, "ஆறு மாதங்கள் ஆயின" என்று பதில் கூறினான்.

"நீ, நிஷிதருக்கு விற்றது கிணறு மட்டும்தானே, தண்ணீர் அல்லவே?" என்று இன்னொரு கேள்வியைக் கேட்டார்.

"இல்லிங்க, நான் கிணற்றை மட்டும்தான் விற்றேன்" என்றான் கருப்பன்.

நீதிபதி சிறிதுநேரம் யோசித்து, "அடே, அசட்டுக் கருப்பா! நீ ஆறுமாதங்கள் வரையில் அவர் கிணற்றில் தண்ணீரை இருக்க விட்டதனால் நீ நிஷிதருக்கு மாதம் பத்துரூபாய் வீதம் ஆறு மாதங்களுக்கு அறுபது ரூபாய் வாடகையைக் கொடுத்துத் தீரவேண்டும். இல்லாவிடில் மூன்று மாதம் சிறைக் காவல் தண்டனை!" என்று தீர்ப்பைக் கூறினார்.

கருப்பன் முகத்தில் அசடு வழிந்தது. அவன் தான் செய்த குற்றத்தை ஒப்புக்கொண்டு, நிஷிதருக்கு அறுபது ரூபாயையும் கொடுத்து விட்டுத் தன்னை மன்னிக்கும்படிக் கேட்டுக்கொண்டான். நிஷிதர் புன்சிரிப்புடன் "கருப்பா, நான் அண்டை வீட்டுக்காரனென்கிற நன்றிகூட வைக்காமல் என்னையே ஏமாற்றப் பார்த்தாயே! உனக்கு நல்லதீர்ப்பைத்தான் நீதிபதி கூறினார்!" என்று சொல்லி அவனை மன்னித்து விட்டார். கருப்பன் யோக்கியனைப்போல் தலைகுனிந்தவாறு வீட்டுக்குச் சென்றான்.

மேலே உள்ள படத்தில் இரண்டு குட்டி முயல்களை கங்காரு மிருகங்கள் தன் அடிவயிற்றில் ஒளித்துவைத்திருக்கின்றன. அவைகளைக் கண்டுபிடிக்கமுடியுமா ?

---

## கோலங்கள்










# மூன்று படங்கள்

ஒரு இளவரசன் வாலிபப் பருவத்தை அடைந்ததும், அயல் நாடுகளின் அதிசயங்களைப் பார்த்து வரவேணுமென்று நினைத்துத் தன் தந்தையிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டான். அவன் அநேக காடுகள், மலைகள் இவைகளைக் கடந்து சென்று, முடிவில் ஓர் ஊரை அடைந்தான். அந்த ஊரில் எல்லா இடங்களிலும் ஒரு அதிசயமான விளம்பரம் ஒட்டப்பட்டிருந்தது. இளவரசன் அதைப் பார்த்து ஆச்சரியப் பட்டான். அவன் அப்படி ஆச்சரியப் பட்டதற்கு காரணம் என்ன தெரியுமா? அந்த விளம்பரத்தில் மூன்று படங்கள் இருந்தன. ஒரு படம் அழகான ஒரு ராஜகுமாரியினுடையது. இரண்டாம் படத்தில் அதே ராஜகுமாரி ஒரு வாலிபனுடன் ஓடுகிறாள். மூன்றாம் படத்தை இரண்டு பிரிவுகளாகப் பிரித்து, அதில் ஒன்றில் ஓடும் வாலிபனைத் தூக்கிலிடுதல்; மற்றொன்றில் இளவரசி அதே வாலிபனுக்குப் பூமாலை சூட்டுதல். அந்தப் படங்களைப் பார்த்த அரசகுமாரனுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

அன்றிரவு தங்குவதற்கு அந்த ஊரில் இருந்த சொக்கிப் பாட்டியின் வீட்டுக்குச் சென்றான். பாட்டி இளவரசனை நோக்கி "நீ யார்? எந்த ஊர்?" முதலிய கேள்விகளை முறையே கேட்டாள். இளவரசன் எல்லாக் கேள்விகளுக்கும் பதில் சொல்லிவிட்டு "அது சரிதான் பாட்டி! இந்த ஊரில் என்ன விசேஷம்?" என்று கேட்டான்.

பி. சுந்தரம், [illegible], சென்னை



"அருமை கண்ணே, சொல்லுகிறேன் கேள்:- இந்த நாட்டின் அரசனுக்கு ஒரு மகள் இருக்கிறாள். அவள் அழகில் ரம்பையைப் போல் இருப்பாள். எல்லாக் கல்வி கேள்விகளிலும் கற்றுத் தேர்ந்தவள். அவளுக்குக் கல்யாணம் என்றாலே பிடிக்காது! ஆனால் தன் தகப்பனாரின் வேண்டுகோளுக்கிணங்கி, அவள் சில நிபந்தனைகளைப் பிறப்பித்திருக்கிறாள். அதாவது: இளவரசியை விவாகம் செய்துகொள்ள விரும்பும் வாலிபன் அவளுடன் ஓட்டப் பந்தயத்தில் ஜெயிக்கவேண்டுமாம். அப்படி ஜெயித்தவனைத்தான் இளவரசி மணம் செய்து கொள்வாளாம். தோற்று விட்டால் அவனை உடனே தூக்கிலிடுவாளாம். இதுதான் அவளின் நிபந்தனைகள்" என்று பாட்டி விபரமாகச் சொன்னாள்.

இளவரசனுக்கு, விளம்பரத்தில் கண்ட மூன்று படங்களின் அர்த்தம் இப்போதுதான் விளங்கிற்று. அவன் மனம் படபடவென்று துடித்தது. "எப்படியானாலும் சரி! அந்த இளவரசியை அடைந்தே தீருவேன்" என்று கங்கணம் கட்டிக்கொண்டு பாட்டியிடம் விடை பெற்றுக்கொண்டு அரண்மனையை நோக்கி நடந்தான். அவன் ஒரு அடர்ந்த தோட்டத்தின் வழியாகப் போகும் போது ஒரு பறவை வலையில் சிக்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தான். அவன் அதை விடுவித்துத் தன் வழியே நடந்து செல்லும் போது, அந்தப் பறவை இளவரசனை நோக்கி, "ராஜகுமாரனே! நீ எனக்குச் செய்த உபகாரத்தை என்றும் மறவேன். என்னுடன் வா. எங்கள் பக்ஷிராஜா உனக்கு ஏதேனும் வெகுமானம் கொடுப்பார்" என்று சொல்லி அழைத்தது.

அரசகுமாரன் பறவையைப் பின்பற்றி நடந்தான். பக்ஷிராஜா தன் மந்திரிகளுடன் சிங்காசனத்தில் அமர்ந்திருந்தது. வலையிலிருந்து விடுதலை பெற்ற பறவை இளவரசனின் நற்குணங்களைப் பற்றித் தன் ராஜாவிடம் புகழ்ந்து பேசிற்று. பக்ஷிராஜா இளவரசனைப் பார்த்து, "உனக்கு என்ன வேண்டுமோ தயங்காமல் கேள்" என்றது.

இளவரசனுக்கு உடனே ஒரு யோசனை தோன்றியது. "பக்ஷி ராஜாவே! எனக்கு ஒரே ஒரு உதவியை மட்டும் தாங்கள் செய்து கொடுத்தால் போதும். அடுத்த ஊர் இளவரசியை மணக்க நான் ஆசைகொண்டிருக்கிறேன். ஆனால் அவளை ஓட்டப் பந்தயத்தில் ஜெயித்தால்தான் மணந்துகொள்ள முடியும். இதற்குத் தாங்கள் ஏதாவது ஒருவழியைச் சொல்லித் தரவேண்டும்" என்று கேட்டான்.

"ராஜகுமாரா! இளவரசியை மணந்து கொள்ளவா ஆசைப்படுகிறாய்? அது மிகவும் சிரமம் ஆயிற்றே. வேண்டுமானால் அந்த வழியைச் சொல்லுகிறேன் கேள்: அவள் பந்தயத்தில் ஒரு ரகசியம் இருக்கிறது. அதாவது: ஏழு



கடல்களைத் தாண்டினால் ஒரு தீவு தென்படும். அத் தீவின் நடுவில் ஒரு குளம் இருக்கிறது. அந்தக் குளத்தில் ஒரு சுரங்கம் பாதாளத்தைநோக்கிச் செல்லும். அதன் வழியாகப் போனால் ஒரு பயங்கரமான இடத்தில் இரண்டு செருப்புகள் இருக்கும். அவைகளை நீ போட்டுக்கொண்டு இளவரசியுடன் ஓடினால் நீதான் ஜெயித்து விடுவாய்!" என்று சொல்லிற்று.

இளவரசன் இதைக் கேட்டுப் பெருமூச்சு விட்டு "இவ்வளவு கஷ்டப்பட்டு நான் எப்படி அந்தச்




செருப்புகளைக் கொண்டுவர முடியும்! அந்தக் காரியத்திற்கும் தாங்களேதான் உதவி செய்ய வேண்டும்" என்று மன்றாடிக் கேட்டுக்கொண்டான்.

பக்ஷிராஜா இளவரசனின் வேண்டுகோளுக்கு இணங்கி, "அப்படியே ஆகட்டும். நான் என் சேனாதிபதியை அனுப்புகிறேன். அதன்மேல் நீ ஏறி உட்கார்ந்தால் உன்னை ஏழுகடல்களையும் கடந்து அந்தத் தீவில் இறக்கிவிடும். பிறகு உன் சாமர்த்தியம்போல் நடந்துகொள்! என்று சொன்னது.

"எனக்கு இவ்வுதவி போதும்!" என்று இளவரசன் வணங்கினான்.

சேனாதிபதிப் பறவை இளவரசனைக் குறிப்பிட்ட தீவில் இறக்கிவிட்டுச் சென்றது. இளவரசன் நடுக்கத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தான். திடீரென்று அவன் எதிரில் ஒரு ராக்ஷஸி தோன்றி "டேய், யாரடா நீ? ஓகோ, மனிதன்தானா! என்னைக் கல்யாணம் செய்து கொண்டால் உன்னை விட்டுவிடுகிறேன். இல்லையேல் உன் தோலை உரித்து எறிந்துவிடுவேன்!" என்று சொல்லிப் பல்லை நறநற வென்று கடித்தது.

இளவரசனுக்கு அப்போதே பாதி உயிர் போனதுபோல் ஆகிவிட்டது. ராக்ஷஸியை நோக்கி, "நான் வந்த வேலை முடிந்தால் உன்னை விவாகம் செய்து கொள்கிறேன்" என்று சொன்னான்.

ராக்ஷஸியும் அதன்படியே ஒப்புக்கொண்டு அவனிடம் ஏதோ ஒருவகை திராவகத்தைக் கொடுத்து, "நீ இதை உடம்பில் தேய்த்துக்கொண்டால் தண்ணீரில் மூழ்கி எங்கு வேண்டுமானாலும் போகலாம். மேலும் தண்ணீருக்குள் இருக்கும் எல்லாப் பொருள்களும் நன்றாகத் தெரிய வரும்" என்று சொல்லிற்று.

இளவரசன் ராக்ஷஸி கொடுத்த திராவகத்தை உடம்பில் பூசிக்

கொண்டு குளத்தில் குதித்தான். உள்ளே ஒரு சுரங்கம் தென்பட்டது. அதன் வழியாகச் செல்லும் போது திடீரென்று ஒரு வெளிச்சம் தென்பட்டது. அந்த வெளிச்சத்தில் ஒரு இரட்டைப் பூதம் மெய் மறந்து தூங்கிக் கொண்டிருந்தது. இளவரசன் பூனைபோல் அடிமேல் அடிவைத்து மெதுவாக உள்ளே சென்றான். அங்கே ஒரு குகை தென்பட்டது. அதன் கூரையில் அழகான இரண்டு செருப்புகள் தொங்கிக் கொண்டு இருந்தன. குகைக்குள் பெரிய பெரிய தேள்களும், பாம்புகளும் ஊர்ந்து கொண்டிருந்தன. அரசகுமாரனுக்குச் செருப்புகளை எப்படி எடுத்துவருவதென்று தெரியவில்லை. அங்கே ஒரு வேதாளம் தூங்கி வழிந்து கொண்டே காவல் காத்தவாறு நடமாடிக் கொண்டிருந்தது. இளவரசன் ஒரு கூண்டுமேல் ஏறி நின்றான். இதற்குள் வேதாளம் அவன் பக்கமாக வருவதைப் பார்த்து, இளவரசன், 'தொபுக்' என்று அதன் தோளின் மீது குதித்தான். தூங்கு மூஞ்சி வேதாளமோ அதை கவனிக்கவே இல்லை. அது குகைக்குள் செல்லும் சமயத்தைப் பார்த்து, இளவரசன் மேலே மாட்டியிருந்த



செருப்புகளைக் கத்தியாலறுத்து எடுத்துக் கொண்டான். வேதாளம் கூண்டுப் பக்கமாக வந்த போது, உடனே கூண்டை எட்டிப் பிடித்துக் கொண்டு மெதுவாக வெளியே வந்தான்.

சுரங்க வாசலில் ஒரு ராக்ஷசன் கள்ளுச் சாராயத்தைக் குடித்துக் கொண்டிருந்தான். அவன் இளவரசனைப் பார்த்து விட்டான். "டேய், திருட்டுப் பயலே! யாரடா நீ?" என்று கூச்சலிட்டான்.

இளவரசன் பயந்துபோய் அங்கே ஜாடியில் இருந்த சா

யத்தைக் கொண்டுவந்து ராக்ஷசன் வாயில் ஊற்றினான். ராக்ஷசனுக்குக் கோபம் தணிந்தது. "டேய், நீ நல்லவனாகத்தான் இருக்கிறாய்! யாரப்பா நீ?" என்று சாந்தமாகக் கேட்டான்.

"என்ன மாமா! என்னைத் தெரியவில்லையா? நான் மது ஊரிலே, சாராய் வீட்டில் இருக்கிறேன். உனக்கு வேண்டிய சாராயத்தை வேண்டிய மட்டும் நான் தருகிறேன். என்னுடன் வருகிறாயா மாமா?" என்று இளவரசன் தந்திரமாகக் கேட்டான்.

"ஆகா! என் உயிரே சாராயம் தான். வாடா கண்ணே! உன்னை என் தோளின்மேல் ஏற்றிக் கொள்கிறேன். உன் வீட்டை எனக்கும் காட்டேன்" என்று ராக்ஷசன் கேட்டுக் கொண்டான்.

அதன்படியே இளவரசனும் ஒப்புக்கொண்டு ராக்ஷசன் தோளின் மீது உட்கார்ந்தான். பாவம்! ராக்ஷசன் இளவரசனை சுலபமாக ஏழு கடல்களையும் தாண்ட வைத்து, கோரக அரண்மனை வாசலில் கொண்டுவந்து இறக்கினான். இளவரசன் ராக்ஷசனைப் பார்த்து, "நீ இங்கேயே ஒளிந்திரு! உனக்கு வேண்டிய சாராயத்தைக் கொண்டு வருகிறேன்" என்று சொல்லி, அவனை ஒரு சிறிய அறையில் பூட்டிவிட்டுக் காலில் செருப்புகளை மாட்டிக் கொண்டுபோய் இளவரசியை ஓட்டப் பந்தயத்தில் தோற்கடித்தான்! அரசகுமாரி என்றுமில்லாத மகிழ்ச்சியுடன் இளவரசனை மாலையிட்டு மணந்தாள்.

அறையில் பூட்டப்பட்டிருந்த அரக்கன் "ஹா-ஹூ" என்று கதறி முடிவில் இறந்துவிட்டான். அவனை உடனே நெருப்பில் போட்டுக் கொளுத்தி விட்டார்கள்.

மறுநாள் இளவரசனின் இஷ்டப்படி ஒவ்வொரு தெருவிலும் அரசகுமாரி இளவரசனை மணந்த படங்களை ஒட்டி, அந்தத் திருவிழாவை ஊர் ஜனங்கள் எல்லாரும் சந்தோஷத்துடன் கொண்டாடினார்கள்.






# பெரிய துணை

ஒரு ஊரில் ஒரு பிராமணன் இருந்தான். அவனுக்கு ஒரு அசட்டு மனைவி இருந்தாள். அவள் எந்த காரியத்தைச் செய்தாலும், அதில் ஏதாவது ஒரு பிழை இருந்தே தீரும். பிராமணனுக்கு அவளைப்பற்றிதான் எப்போதும் கவலை. தன் வீட்டுக்கு வேண்டிய சாமான்களைப் பிராமணனே சென்று வாங்கி வருவான். அவன் மனைவி வீட்டிலேயே இருந்து சுகமாகக் காலத்தைக் கழிப்பாள்.

சித்திரை, வைகாசி மாதங்களில் சொல்லிமுடியாத வெய்யில் அல்லவா! பிராமணனுக்கு, வெய்யிலில் நடந்து சென்று பலசரக்குகளை வாங்கி வருவதென்றால், மிகவும் சிரமமாகப் போய்விட்டது. ஆதலால் அவன் முன்னதாகவே சித்திரை, வைகாசி மாதங்களுக்குப் போதுமான சாமான்களை வாங்கி வரத் தீர்மானித்தான். அதன்படி பிராமணன் கடைத்தெருவுக்குச் சென்று, இரண்டு மாதங்களுக்குப் போதுமான உப்பு, மிளகாய், புளி, தனியா, வெங்காயம் முதலியவற்றை வாங்கிவந்து மனைவியிடம் கொடுத்து, "அடியே! நான் அடுத்த ஊருக்குச் செல்லுகிறேன். திரும்பிவர ஒருமாதத்திற்குமேல் ஆகும். இதற்குள் சித்திரை, வைகாசிகள் வரப்போகின்றன. ஆகையால் வேண்டிய பல சரக்குகளை நான் நேற்றே வாங்கிக்கொண்டுவந்து உன்னிடம் கொடுத்துவிட்டேன். வீடு ஜாக்கிரதை!" என்று சொல்லிவிட்டுப் போனான்.

பிராமணன் மனைவியோ, அந்த அசடு. 'சித்திரை, வைகாசிகள் வரப்போவதாகச் சொல்லிச் சென்றாரே; அவர்கள் வந்தால் நான் இந்த பலசரக்குகளை அவர்களுக்குத்தான் கொடுக்கவேண்டும் போல் இருக்கிறது" என்று தீர்மானித்துக் கொண்டாள் பாவம்! அவள் 'சித்திரை - வைகாசிகள்' என்பதை யாரோ இரண்டு நபர்களின் பெயர்களாக இருக்கும் என்று நினைத்துக் கொண்டாள்.

அவள் நாள்தோறும் தன் வீட்டு வாசலில் நின்றுகொண்டு, "இன்னும் சித்திரை - வைகாசிகள் வரவில்லையே; எப்போது

எ. என். வேதாசலம், திருவல்லிக்கேணி



ான் வரப்போகிறார்களோ தெரியவில்லையே!'' என்று பிதற்றிக் கொண்டே இருந்தான்.

இவன் சொல்லிக் கொண்டதை கந்து வீட்டிலிருந்த இரண்டு டையர்கள் கேட்டார்கள். அவர் ள் மறுநாள் காலையில் பெரிய டங்களை எடுத்துக் கொண்டு கராக பிராமணன் வீட்டுக்குள் ழைந்தார்கள். பிராமணன் னைவி அவர்களை நோக்கி, "நீங் ள் யார்? எங்கே வந்தீர்கள்?'' ன்று கேட்டாள்.

இதுதான் நல்ல சமயமென்று னைத்து அவர்கள், "எங்களைத் தெரியவில்லையா உங்களுக்கு! ங்கள்தாம் சித்திரை - வைகாசி ன்'' என்று சொன்னார்கள்.

அந்த அசட்டுப் பெண் முன்னும் பின்னும் யோசியாமல், பிராமணன் அன்று கொண்டு வந்து கொடுத்த இரண்டுமாதத்துச் சாமான்களை அவர்களிடம் கொடுத்து ஒரு கும்பிடும் போட்டு அனுப்பினாள். அவர்கள் அவைகளைப் பெற்றுக்கொண்டு கம்பியை நீட்டினார்கள்!

ஊருக்குப் போயிருந்த பிராமணன் வீடு திரும்பியதும், அவன் மனைவி தான் செய்த சிறந்த காரியத்தைப் பெருமையாகச் சொல்லிக்கொண்டாள். பிராமணனுக்கு இதைக் கேட்டதும் கட்டுக் கடங்காத கோபம் வந்தது. "அடி பாவி! எல்லா சாமான்களையும் யாரோ வழிப்போக்கர்களுக்குத் தத்தம் செய்துவிட்டதுமல்லாமல், இந்தப் பெருமையை வேறு சொல்லிக் கொள்கிறாயே. உனக்குக் கொஞ்சமாவது புத்தி இருக்கிறதா?'' என்று சீறி விழுந்தான். பிராமணன் மனைவியோ, தனக்கு நேர்ந்த அவமானத்தைச் சகிக்க மாட்டாமல் உள்ளே சென்று விட்டாள்.

சில நாட்கள் கழிந்தன. பிராமணன் மனைவி நாள்தோறும் வீட்டு வேலைகளில் ஏதாவது ஒரு தவறு செய்துவிட்டுத் தன் கணவனிடம் திட்டு வாங்கிக் கொண்டே இருந்தாள். ஒருநாள் பிராமணனுக்குக் கோபம் வந்து விட்டது. "என் வீட்டிலே ஒரு பெரிய தொல்லை இல்லாததனால்தான்

எனக்கு இவ்வளவு சங்கடமாகப் போய்விட்டது. இருந்தால் நான் ஏன் இப்படி இவளைக் கட்டிக்கொண்டு திண்டாடப்போகிறேன்?" என்று அவளை நோக்கி இரைந்து பேசினான்.

பிராமணன் கூறிய 'பெரிய துணை' என்ற வார்த்தையை மட்டும் அவள் நன்றாக ஞாபகத்தில் வைத்துக் கொண்டான். ஆனால் பெரிய துணை என்றால் என்னவென்று அவளுக்குப் புரியவில்லை. பிராமணன் வீட்டில் இல்லாத சமயங்களில் அவள் வீட்டு வாசலில் நின்றுகொண்டு, "எனக்கும் ஒரு பெரிய துணை கிடைத்தால் நன்றாக இருக்கும். நானும் என் கணவரிடம் திட்டுவாங்கிக் கொள்ளாமல் சுகமாக இருப்பேன்" என்று உளறிக் கொண்டே இருந்தான். இந்தப் பிதற்றலை ஒரு பொம்மைக்காரன் கேட்டு விட்டான். அவன் வைக்கோலினால் ஒரு பெரிய பொம்மையைச் செய்து அந்தத் தெருவழியாக எடுத்துவந்தான். பிராமணன் வீட்டு வாசலில் நின்று கொண்டு, "பெரிய துணையோ, பெரியதுணை - அம்மா பெரிய துணை வேண்டுமா?" என்று உரத்தகுரலில் கூச்சலிட்டான்.

பிராமணன் மனைவி பெரிய துணையை விலைகொடுத்து வாங்கி அதை பத்திரமாக நடுவீட்டில் வைத்து பூஜை செய்துகொண்டிருந்தான். அந்த சமயத்தில்



வெளியில் சென்றிருந்த பிராமணன் வீட்டுக்குள் நுழைந்தான். அவள் சந்தோஷத்துடன் தான் வாங்கிய பெரிய துணையைக் காட்டினான்.

அதைப் பார்த்ததும் பிராமணன் வயிறு பற்றி எரிந்தது. "ஐயோ, வைக்கோல் பொம்மையை விலைகொடுத்து வாங்கினாயே! இனிமேல் நீ என் வீட்டில் இருக்கவேண்டாம். தொலைந்து போ, வெளியே" என்று சொல்லி அவளைத் துரத்திவிட்டான். அவள் தன் பெரிய துணையைக் கைபிடித்துக் கொண்டு பிறந்தகத்துக்குக் கால் நடையாகப் புறப்பட்டான். அவள் ஒரு

காட்டின் வழியாகப் போகும் போது பொழுதும் சாய்ந்து விட்டது. காட்டிலே மிருகங்களின் பயம் அதிகம். ஆகையால் அவள் தன் பெரிய துணையுடன் ஒரு ஆலமரத்தின்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டாள். நடு இரவில் சில திருடர்கள் தாங்கள் திருடிய நகைகளை அந்த ஆலமரத்தடியில் குவித்துப் பங்கிட்டுக்கொண்டிருந்தார்கள். அந்த சமயத்தில் பிராமணன் மனைவியின் கையிலிருந்த பெரியதுணை 'தொப்' என்று அவர்கள் நடுவில் விழுந்தது. "இது ஏதடா பிசாசுபோல் இருக்கிறதே! வாங்கடா ஓடிவிடலாம்" என்று சொல்லிக் கொண்டே, திருடர்கள் 'செத்தோம், பிழைத்தோம்' என்று திரும்பியும் பாராமல் கம்பியை நீட்டினார்கள்.

பொழுது விடிந்ததும் பிராமணன் மனைவி மரத்தைவிட்டுக் கீழே இறங்கி, அங்கே குவிந்திருந்த பொன் நகைகளை எல்லாம் மடியில் போட்டுக்கொண்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். "போன கழுதை திரும்பவும் ஏனடி வந்தாய்?" என்று பிராமணன் அதட்டினான்.

"இதோ பாருங்கள், என் பெரிய துணையின் மகிமை!" என்று சொல்லி அவள் கொண்டு வந்த நகைகளைக் கீழே உதறினாள். பிராமணனோ அளவு கடந்த மகிழ்ச்சி அடைந்தான். அன்று முதல் இருவரும் ஒற்றுமையாக வாழ்க்கையை நடத்தத் தொடங்கினார்கள்.






கூடலூர் கோட்டை குலசேகரன் என்னும் ஓர் அரசன் ஆண்டு வந்தான். அவனுக்கு அநேக வருடங்கள் வரை ஒரு குழந்தையும் பிறக்கவில்லை. அரசன் மனைவி தாங்கமாட்டாத மனக் கஷ்டத்துடன் இருந்தாள்.

அரசன் தன் அரண்மனையில் ஒரு பெண் குதிரையையும், ஒரு பெண் நாயையும் வளர்த்து வந்தான். அரசியும் அவைகளிடத்தில் மிகவும் அன்பாக இருந்து வந்தாள். என்ன சோதனையோ, தெரியவில்லை. குதிரைக்கும், நாய்க்கும் கூட ஒரு குட்டியும் பிறக்கவில்லை. அரசனும் அரசியும் அவைகளைப் பார்க்கும்போதெல்லாம் மனக்கலக்கம் அடைந்தார்கள்.

ஒரு நாள் அரசன் தன் சேவகன் மூலம், தனக்கும், தன் குதிரைக்கும், தன் நாய்க்கும் குழந்தைகள் பிறக்கும் உபாயத்தைச் சொல்லுகிறவர்களுக்கு, போதுமான வெகுமதிகள் கொடுக்கப்படும் என்று பறை சாற்றுவித்தான்.

இதைக் கேட்டு அநேக வைத்திய நிபுணர்களும், மந்திரக்காரர்களும், சாமியார்களும் இன்னும் எத்தனையோ பேர்கள் வந்து அவர்களால் இயன்ற மந்திர தந்திரங்களைச் செய்து பார்த்தார்கள். ஆனால் அவர்களின் மந்திரமும், தந்திரமும் அங்கே ஒன்றும் பலிக்கவில்லை. இதனால் அரசனுக்கு வாழ்க்கையின் மீது வெறுப்பு ஏற்பட்டது.

இது நடந்த சில காலத்துக்குப் பிறகு அரசனைத் தேடி ஒரு ஆண்டி வந்தான். பிள்ளைகள் பிறக்கும் உபாயத்தைத் தான் சொல்லுவதாக அரசனிடம் கூறினான். அரசனுக்கு சந்நியாசிகளைக் கண்டாலே பிடிக்காது. ஆனாலும் 'எந்தப் புற்றில் எந்தப் பாம்பு

டி. கே. நீலகண்டம், மதுரை



"இருக்குமோ? யார் கண்டார்கள்!" என்று நினைத்து, அரசன் சந்நியாசியைத் தக்கவாறு உபசரித்தான்.

சந்நியாசி அரசனை நோக்கி, "அரசே! நான் உனக்கு ஒன்பது மாத்திரைகளைத் தருகிறேன். முதலில் உன் மனைவிக்கு ஒரு மாத்திரையும், குதிரைக்கு ஒரு மாத்திரையும், நாய்க்கு ஒரு மாத்திரையும் கொடுங்கள். அடுத்த மாதத்தில் அரசிக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்கும். குதிரைக்கு ஒரு குட்டியும், நாய்க்கு ஒரு குட்டியும் கூட பிறக்கும். அதேபோல் இந்த மாத்திரைகளை மூன்று மாதங்களுக்கு மூன்று தடவைகளாகத் தலைக்கு மூன்று மாத்திரைகள் வீதம் கொடுத்தால், மூன்று மாதங்களுக்குள் மூன்று பேருக்கும் மும்மூன்று குழந்தைகள் பிறக்கும். ஆனால் குழந்தைகள் பிறந்த மூன்று வருடங்கள் சென்றதும் நான் மீண்டும் உன்னைத் தேடி வருவேன். அப்போது நீங்கள் எனக்குத் தங்கள் குழந்தை ஒன்றும், குதிரைக் குட்டி ஒன்றும், நாய்க் குட்டி ஒன்றும் கொடுத்து விடவேண்டும். இதற்கு நீங்கள் சம்மதித்தால் நான் இந்த மாத்திரைகளைத் தங்களிடம் கொடுப்பேன்" என்று சந்நியாசி சொன்னான்.

அரசன் சிறிதுநேரம் யோசித்துப் பார்த்தான். மனதைத் திடப்படுத்திக் கொண்டான். சந்நியாசியைப் பார்த்து, "சுவாமி! அப்படியே ஆகட்டும். தங்கள் இஷ்டப் படியே ஒவ்வொன்றிற்கும் பிறக்கும் ஒவ்வொரு குழந்தையைத் தங்களிடமே தந்து விடுகிறேன்" என்றான். சந்நியாசி சந்தோஷத்துடன் அரசனிடம் ஒன்பது மாத்திரைகளைக் கொடுத்து விட்டுச் சென்றான். சந்நியாசி



கூறியபடி ஒன்பது மாத்திரைகளை மாதத்திற்கு ஒன்று வீதம் மூன்று மாதங்களுக்குள் நமக்கு மூன்று மாத்திரைகளைக் கொடுத்தான். அதன் விளைவாக மூன்று மாதங்களுக்குள் ராணிக்கு மூன்று ஆண் குழந்தைகளும், குதிரைக்கு மூன்று குட்டிகளும், நாய்க்கு மூன்று குட்டிகளும் பிறந்தன. அரசனின் சந்தோஷத்திற்கு எல்லையே இல்லாமல் இருந்தது.

இந்த சந்தோஷச் செய்தி ஊரெல்லாம் பரவி விட்டது. குழந்தைகளின் ஜனனவிழாவை வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள். அரசன் எல்லா ஏழைகளுக்கும் அன்னதானம், வஸ்திரதானம் முதலியவைகளைச் செய்தான்.

இப்படியாக சில காலம் கழிந்தது. அரச குமாரர்கள் தத்திப் பேசித் தவழ்ந்து நடக்கும் வயதை அடைந்தனர். மூன்று வருடங்கள் முடியும் சமயம் அது. அரசன் மனதில் திகில் பிடித்துக்கொண்டது. மூன்று வருடங்கள் கழிந்து விட்டால் சந்நியாசி எங்கே வந்து விடப்போகிறானோ என்பதுதான் அவர் பயம்.

இதற்கிடையே குதிரைக் குட்டிகளும் மிகவும் அழகாக வளர்ந்து வந்தன. நாய்க் குட்டிகளும் கொழு கொழு வென்று வளர்ந்தன. அரசன் இவைகளை நாள்தோறும் கண்குளிரப் பார்ப்பதுண்டு. ஆனால் ஒரு பக்கம் சந்தோஷம், மற்றொரு பக்கம் துக்கம் அரசனை சூழ்ந்துகொண்டன.

ராணிக்கும் இதைப்பற்றிதான் ஒரே கவலையாகி விட்டது. "என் அருமைப் புதல்வர்கள் மூவரும் மும்மணிகளைப்போல் இருக்கிறார்களே, நான் எப்படி ஒருவனை மட்டும் சந்நியாசிக்குக் கொடுத்து, சந்தோஷமாக இருக்க முடியும்? அதுதான் போகட்டும். அழகான

மூன்று குதிரைக்குட்டிகளில் ஒரு குட்டியை மட்டும் கொடுத்து விட்டால் பெண் குதிரைக்கு எவ்வளவு கவலையாக இருக்கும்? இதைப் போன்ற கவலைதானே பெண் நாய்க்கும் இருக்கும்" என்று ராணி தன் அரண்மனையிலிருந்தபடியே விசித்து விசித்து அழுதாள்.

ஒரு நாள் அரசன் பூங்காவில் உலாவிக்கொண்டிருக்கும்போது அவன் குமாரர்கள் மூவரும் ஓடோடியும் வந்து அரசன் கால்களை வளைத்துப் பிடித்துக் கொண்டார்கள். அவர்களுடன் நாய்க் குட்டிகளும் பின்தொடர்ந்து வந்தன. அரசன் அவர்களைப் பார்த்துப் பெருமூச்சு விட்டான். ஒவ்வொரு குழந்தையையும் தோளின்மீது ஏற்றிக்கொண்டு முத்தமிட்டு மகிழ்ந்தான். அவன் பிள்ளைகளும் நாய்க்குட்டிகளை எடுத்துக்கொண்டு முத்த மிட்டார்கள். இந்த காட்சியைப் பார்த்த அரசனுக்கு மனதில் ஏதோ ஒரு குழப்பம் உண்டாகி விட்டது. தன்னை அறியாமலேயே கண்களிலிருந்து இரண்டு துளிகள் கீழே சொட்டின.

அந்த சமயத்தில் அரசனுக்குச் சந்நியாசியின் ஞாபகம் வந்தது. அவன் தலை 'கிர்' என்று சுழன்றது. கோபமும் சாந்தமும் முறையே வந்து அவன் மனதை புண் படுத்தி விட்டன.

"என்ன இருந்தாலும் சொன்ன சொல்லை மாற்ற முடியுமா? அப்படி மாற்றினாலும் அந்த மாயசந்நியாசி மட்டும் நம்மை விட்டுவிடுவாரா?" என்று எல்லாம் அரசன் பைத்தியம்பிடித்தவன்போல் பிதற்றிக்கொண்டிருந்தான். ஆனால் காலத்தைத் தடுக்கமுடியுமா? இப்படியாகவே மூன்று வருடங்களும் பூர்த்தியாகி விட்டன.

(தொடரும்)



# கர்ணம் முத்துசாமி

சிவபுரி என்னும் ஊரில் முத்து சாமி என்பவர் "கிராமக் கர்ணம்" வேலை பார்த்து வந்தார். கிராமத்து ஜனங்களும் மேலுத்தியோகஸ்தர்களும் முத்துசாமியை, "ஏ! கர்ணம்! ஏ! கர்ணம்!" என்று அழைத்தார்கள். 'நம்மை எவர் பார்த்தாலும் ஏ! கர்ணம் ஏ! கர்ணம் என்று இழிவாகக் கூப்பிடுகிறார்கள். துளிக்கூட மதிப்பே கிடையாது' என அவர் யோசித்தார். 'கர்ணம் வேலையை ராஜினாமா செய்து விட்டு வேறு தொழில் செய்யலாம். சமையல் வேலை புரிந்தால் வருமானம் ஏராளமாகக் கிடைக்கும், சுகமாகச் சாப்பிடலாம்' என்று நினைத்து, அடுத்த ஊரில் பணக்காரரான நாராயணன் என்பவரிடம் சமையல் வேலைக்கு அமர்ந்தார்.

சிலநாள் சென்றதும் அவ்வூரில் சங்கரய்யர் வீட்டுக் கல்யாணத்துக்கு சமையல் செய்யும்படி, முத்துசாமியை அழைத்தார்கள். முத்துசாமியும் தன்னுடைய சகாக்களுடன் சமையல் வேலைக்கு அமர்ந்தார். முத்து சாமியும் கோகர்ணம் என்று சொல்லப்படும் மூக்கு வைத்த தூக்குச் சட்டியில் கறி பரிமாறினார். பந்தியில் சாப்பிட்ட ஒருவர் "ஏ! கோகர்ணம்! இங்கு கறி கொண்டுவா" என்று அழைத்தார்.

பார்த்தார் முத்துசாமி! வந்தது கோபம்! "அடடா! போதும்! போதும்!! ஏ, கர்ணம் போய், கோகர்ணம்! வந்தது!" என நினைத்துடனே அந்த வேலையை விட்டுவிட்டார். வேறு என்ன வேலை செய்யலாம் என யோசித்து, மல்யுத்தப்பயிற்சி செய்தால் தக்கவருமானம் கிடைக்கும், கௌரவமும் உண்டு எனத் தீர்மானித்துக்கொண்டார்.

இராமநாதபுரியில் மல்யுத்தத்தில் கைதேர்ந்து, பரிசும் பெற்ற ஜெயகீர்த்திசிங் என்பவரிடம் சென்று தன்னை சிஷ்யனாக எடுத்துக் கொள்ளுமாறு கேட்டார். அவரும் அங்கங்களையெல்லாம் சோதித்துப் பார்த்து முத்து சாமியை மல்யுத்தப் பயிற்சிக்கு எடுத்துக் கொண்டார். சிலநாள் சென்றது. பின்பு, முத்துசாமி

என். கே. ராஜம்மாள், அருப்புக்கோட்டை.



யைப் பார்த்து குட்டிக்கர்ணம் போடச்சொன்னார் அவரும் "அட கடவுளே! எங்கு சென்றாலும் கர்ணம் நம்மை விடாது போலிருக்கிறது! வெறும் கர்ணம் போய், கோகர்ணம் கிடைத்தது, இப்போது குட்டிக்கர்ணமாகி விட்டது!" என நினைத்தார். வேறு என்ன வேலைபார்க்கலாம் என யோசித்து, வைதிகத் தொழிலில் கர்ணம் வராது என்று தீர்மானித்து, தன் சொந்த ஊரிலேயே வைதிகத்தொழில் பார்த்தார்.

அவ்வூரின் வைதிக சிரோமணியாகிய கோபால கனபாடிகள் நமது முத்துசாமியிடம் வந்து, "இன்றையதினம் நமது இல்லத்தில் சவுண்டி கர்ணம் நடக்கப் போகிறது. வரவேண்டும்" என்று சொன்னார். முத்துசாமிக்கு என்ன செய்வதென்று புரியவில்லை.

வெறும் கர்ணம் கோகர்ணம் ஆகி, பின்பு குட்டிக்கர்ணம் என்றுமாறி, இப்போது சவுண்டி கர்ணம் என்று வாய்த்தது! இவ்வேலை சரிப்படாது என நினைத்து கிருஷ்ணபுரிக்குச் சென்று, அர்ஜுனன் என்பவரிடம் காவியம், சாஸ்திரம், தர்க்கம் முதலியவைகளைப் படித்து சகல சாஸ்திர பண்டிதனெனப் பேரும் வகித்து வந்தார். இதைக் கேள்விப்பட்டு இவரிடம் பொருமை கொண்ட கந்தசாஸ்திரியார் இவரிடம் வந்து "உமக்கு வியாகர்ணம் தெரியுமா?" என்று கேட்டார். நமது முத்துசாமிக்கு வந்து விட்டது கோபம். "நாம் கர்ணத்தை விட்டாலும், கர்ணம் நம்மை விடாது போலிருக்கிறதே! அப்பப்பா வெறும் கர்ணம்! கோகர்ணம்! குட்டிக்கர்ணம்! சவுண்டி கர்ணம்! வியாகர்ணம்!! எல்லாம் கர்ணமயம்தான்! என்ன செய்யலாம்?" என யோசனை செய்து நாடகத்தில் சேர்ந்தால் கர்ணம் வராது எனச் சேர்ந்தார். அங்கும் அவருக்குக் 'கும்பகர்ணன்' ஆக்ட் கிடைத்தது! என்ன செய்வார் பாவம்? பழைய கர்ணம் வேலையே மேல் என நினைத்து, சிவபுரிக்குச் சென்று கிராமக்கர்ணம் வேலை செய்து வந்தார்! அன்று முதல் ஊராரும் "நமதுகர்ணம்" என்றே அவரை அழைத்தார்கள்.





பாலர்களே !

படத்தின் மத்தியில் உள்ள ஒரு கொட்டிலுக்குச் செல்ல வழி தெரியாமல் நாலு மாடுகளும் தவிக்கின்றன. ஆனால் ஒரு மாடுமட்டும்தான் அங்கே செல்ல முடியும். அந்த மாடு எது என்பதைக் கண்டுபிடிக்க முடியுமா?

---

12-ம் பக்கத்தின் சித்திரக் கோடுகளின் விடை :—3, 6 எண்களுள்ள கோடுகள் ஒரே விதமாகவும், மற்ற ஆறு கோடுகள் ஒரு விதமாகவும் இருக்கின்றன.

---

சென்ற மாதத்து வார்த்தை விளையாட்டு-2 ன் விடை :—

1. மண் எண்ணெய்
2. பூமண்டலம்
3. களிமண் பூமி
4. அரிசி மண்டி
5. வண்டல் மண்



# மூன்று சித்திரக்காரர்கள்

கே. லிங்கநாதன், அவனூர்.

ஒரு ஊரில் மூன்று சித்திரக்காரர்கள் மிகவும் நண்பர்களாக இருந்தனர். அவர்கள் அவ்வூர் அரசனிடம் சென்று தங்கள் திறமையைக் காண்பிக்க எண்ணி, முதல் நண்பன் ஒரு பூச்செண்டும், இரண்டாம் நண்பன் ஒரு பழக் கூடையும், மூன்றும் நண்பன் ஒரு திரையும் சுவற்றில் வரைந்தார்கள். அரசனும் அப்போது தான் அங்கே வந்தான்.

ஒரு தேனீ பூச்செண்டைப் பார்த்து அதன் தேனை உண்பதற்காக வந்து ஏமாந்தது. ஒரு கிளி பழக்கூடையில் இருப்பது உண்மையில் பழங்கள் என்று எண்ணி அதைக் கொத்தித் தின்ன முயன்று ஏமாந்தது.

அரசன் சந்தோஷத்துடன் மூன்றாவது படம் எங்கே போய் விட்டது என்று சொல்லிக் கொண்டே திரையை எடுத்துப் பார்க்க முயன்றான். ஆனால் அவனுக்கு அப்போது தான் அது திரையின் படம் என்று ஞாபகம் வந்தது. தான் உண்மையிலேயே திரை என்று நினைத்து ஏமாந்ததால் மூன்றாவது சித்திரக்காரனுக்கு மட்டும் அதிக வெகுமதிகளைக் கொடுத்து அனுப்பினான்.

## வார்த்தை விளையாட்டு - (3)

கீழ்கண்ட சதுரத்தை அதன் கீழே கொடுத்திருக்கும் வாக்கியங்களின் உதவியினால் பூர்த்தி செய்யுங்கள் பார்க்கலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | க | ன் | | | |
| 2 | | க | ன் | | |
| 3 | | | க | ன் | |
| 4 | | | | க | ன் |

1. பெரியவர்களுக்கு வயது ஆக ஆக இது மங்கிக் கொண்டேவரும்.
2. கோவிலில் எரியும் பெரிய விளக்கு.
3. இரத்தக் கட்டி நிற்கிறும்.
4. சிலரைக் கண் உடையவரே என்று ..........................................பெயர் வைப்பார்கள்.

விடை அடுத்த இதழில் பார்க்கவும்.

## போட்டியின் சரியான விடை

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ■ | ப | ர | தே | சி | ■ | ■ |
| ■ | த | வி | ■ | சு | வா | தி |
| நா | ம் | ■ | செ | ■ | து | ரு |
| ற் | ■ | க | ன் | று | ■ | ம |
| ப | தி | ■ | லை | ■ | ஆ | ல |
| து | ற | வி | ■ | பா | டு | ■ |
| ■ | ■ | தி | ர | வ | ம் | ■ |

# ஆந்திரஜோதி

**தெலுங்கில் வெளியாகும் பிரபலமான**
**இணையற்ற தேசிய மாதப் பத்திரிகை.**

●

உயர்ந்த நோக்கங்களைக் கொண்டது. அதிகமான ஆதரவைப்பெற்றது. நல்ல செல்வாக்கையும் உடையது. காந்திஜியின் உன்னத தத்துவங்களையும் காங்கிரஸின் பரந்த அரசியல் கொள்கைகளையும் ஆந்திர மக்களிடையே பரப்பி நம் இந்திய தேசத்தின் முன்னேற்றத்துக்காகத் தன் சேவையை அர்ப்பணம் செய்து வருகிறது.

பத்திரிகை தோன்றியது முதற்கொண்டே, தமிழ், தெலுங்கு, கன்னடம் இந்தப் பிரதேசங்களின் நல்லுறவையும் இதர மாகாணங்களின் கூட்டுறவையும் பிரசாரம் செய்து கொண்டு வருகிறது. ...

நல்ல வர்ணப்படங்கள், சிறந்த கட்டுரைகள், உயர்ந்த கதைகள், ஹாஸ்யம் ததும்பும் வாழ்க்கைச்சித்திரங்கள் இவைகளைத் தாங்கிவரும் தெலுங்குப் பத்திரிகைகளில் மிகச்சிறந்தது.

●

**விளம்பரத்துக்கு ஏற்ற சாதனம் ஆந்திரஜோதியே!**

---

விவரங்களுக்கு:

மானேஜர்,

**ஆந்திரஜோதி காரியாலயம்**

போஸ்ட் பாக்ஸ் நெம்பர் 1686, சென்னை.

Controlling Editor: SRI CHAKRAPANI



அம்புலிமாமா பழமொழிகள் - 2

பிள்ளைகள் பெற்றோருக்குப் பிடித்தம்!
அம்புலிமாமா எல்லோருக்கும் பிடித்தம்!!

'அம்புலிமாமா' தெலுங்கிலும்
கன்னடத்திலும்கூட வெளியாகிறது.